திருச்சிற்றம்பலம்.

# அத்துவித வாக்கியத் தெளிவுரை

---

...துவித மென்னுஞ் சொல்லில் நகரம், அன்
...ன்மை, மறுதலை என்னு மூன்றனு ளொ
...க்கும். அவற்றுள்; இன்மைப் பொருள்
...டமாயாவாதி, இரண்டின்மை ஒருபொரு
இரண்டு முதலியவா யெண்ணப்படும் பொ
...ல்லாமையான், அத்துவித மென்னுஞ்
...ப்பொருளொன்றென்பதே யாமெனவும்,
...ருளாயினுங் குணகுணியின் வேற்றுமை
...ற நிற்பிற் கேவலமொன்றாத லின்மையான்
...விதமென்ப துபசாரச்சொல்லாய் முடியு
...ன், தன்னின் வேறுயொரு பொருளுமின்
...னுங் குணமுடைய பொருளென விசேடிக்
...த்லின்றி நிர்விசேடமாய் நிற்கும் பரப்பிரமப்
...ருளென்பது அத்துவித மென்னுஞ் சொற்
...பொருளாகக் கோடலின் அவர்கள் கேவலா
...திகளெனவும் வழங்கப்படுவர்.

...ராமாநுசர் சிவாத்துவித சைவர் முதலானோ
அவ்வாறே இன்மைபற்றி யொன்றே யெனப்
...ருள்கொண்டு, சத்தி சங்கற்ப முதலிய குண...
...பரப்பிரமப் பொருளுக்குளவென்று உமை
...ங்கள் கூறுதலானும், அவை செய்கைபோத

தற்கோடரியையின்மையானும், பசுபாசமெண்ணிய முபநிடதங்களிஞேதுதலானும், அவைகளாலேத் ணிக் கேவலாத்துவிதமெனக் கோடற் பொரு காமையின், தன்னுடைமையுடைய பசு பாசங் யானுந் தன் குணங்களாய சத்தி சங்கற் முதல் வற்றுனும் விசேடிக்கப்பட்டு விசிட்டமாய் நின் பரபிரமம் இரண்டில்லை யென்பதே அத்துவித மென்னுஞ்சொற்குப்பொருளென விசிட்டாத்துவி தங் கோடலான் அவர்கள்விசிட்டாத்துவிதிக ளென வழங்கப்படுவர்.

பேதவாதிகள், மறுதலைப் பொருள்பற்றி இர ண்டன் மறுதலையாகிய ஒன்றெனப் பொருள கொண்டு, அங்ஙனங் கொள்ளவே அவ்வொன்றன் மறுதலையாகிய இரண்டாவது முண்டென்றற் கிழு க்கின்மையின் அத்துவிதமென்பதுந் துவிதமென் னும்பொருளைப்பயக்குமென்றுபோவர்.

அவரெல்லாம் அச்சொற்கு ஒன்றே யெனப் பொருள்கொண்டு தத்தமதங்களோடு முரணுமை ப்பொருட்டுக் கேவலம், விசிட்டம், மறுதலை யெ ன்னு மடைகட்டி யிடர்ப்படும் பொருள்கொள்வர். அவருண் மாயாவாதி கூறுங்கேவலமும், பேத வாதி கூறுமறுதலையுஞ் சுருதியோடு முரணுறுதலி னீண்டைக்கேலாவாம்; ஏனையோர் கூறும் விசிட் டம் பொருந்துமாயினும், அத்துவிதத்துக்குப் பொருளொன்றெனக் கோடல் பொருந்தாது; ? ஒன்றென்பது பொருளாயின், ஒன்றெ

...வ விளங்கக்கூறவமையும்; அவ்வாறின்றி, ...ந்துவிதமென வுய்த்துணரவைத் தோதவேண் ...ாமையானும், ஒன்றெனப் பொருள்கொள்ளின், ...ாவாக்கியப்பொருள் பயப்பதோர் விசேடமின் ...மையின், அத்துவிதமென்பதுபற்றி ஆண்டொரு ...யன்படாமையானு மென்க.

மற்றென்னையோ அத்துவிதமென்னுஞ் சொற் ...துப்பொருளெனின் சித்தாந்த சைவருரைக்குமா ...றுகாட்டுதும்; அது நீ யாகின்றாயெனவும், அது நானாகின்றேனெனவும், அது வதுவாகின்றதென ...வுழிவிடம் பற்றி நிகழுந் தத்துவமசி முதலிய மா ...வாக்கியங்களைக் கேட்டவழி, அதுவென்பதொரு ...பொருள், நீயென்பதொருபொருளாகலின், ஒரு ...பொருண்மற்றொரு பொருளாமாறியாங்ஙனமென் ...மையை நீக்குதற் கெழுந்ததாகலின், அதுவது ...வாதற்கேதுவான அவ்விரண்டு முளதாகியசம ...பந்தவிசேட முணர்த்துதலே அத்துவிதமென்னு ...ஞ்சொற்குப் பொருளென் றுணர்ந்துகொள்க.

அற்றேல் அத்துவிதமென்னுஞ் சொல்லாற் பெறப்படுஞ் சம்பந்தம் ஐக்கியமோ, தாதான்மிய மோ, சமவாயமோ, சையோகமோ வெனக்கடா யினார்க்கு,ஆற்றுநீருங்கடனீருந் தம்மிற் சேர்ந்தாற் போலவும்,குடாகாயமு மகாகாயமுந் தம்மிற்சேர்ந் தாற்போலவு மாமெனின்; அங்ஙனஞ் சேர்ந்தவழி யொருபொருளே யாயினும், ஒன்றெனவேயமை யும்; அத்துவிதமென வுய்த்துணரவைத்தோத

வேண்டா; அன்றியுமொன்றுபடுழி, அதுவதுவாய்
நின்றறிதலாகிய ஆன்மாவிலக்கண முத்திக்காலத்
தில்லையெனப்பட்டு வழுவாமாகலின், அது பொ
ருந்தாமையானும்; குணகுணிகட்குத் தம்மினுள
தாகியசம்பந்தம்போலுந் தாதான்மியமெனின்; ஞா
ன்மாமுதல்வனைப்போலக் குணகுணிப்பொருளாய்
நிற்பதன்றி முதல்வனுக்குக் குணமாகாமையான்,
அவ்வாறியைதல் கூடாமையானும்; தாதான்மிய
த்தின் வேறாய் நையாயிகர் கூறுஞ்சமவாயமொன்
றின்மையானும்; விரலும் விரலுஞ் சேர்ந்து நின்
றாற்போலச் சையோகமெனின்; அவ்வியாப்பிய
விருத்தியாகிய சையோகம் வியாபகப்பொருட்குக்
கூடாமையானும்; யாதானு மோரினைப் பற்றிக்
கூறப்படுஞ் சொரூப சம்பந்தமெனின்; அதுமா
வாக்கியப்பொருளை வலியுறுத்தற் கெழுந்த அத்
துவிதச்சொற்குப் பொருளாகாதானுஞ், சொரூப
சம்பந்தமாத்திரையிற் சிவானந்தத்தை யனுபவித்
தல் கூடாமையானும்; இவற்றின் வேறு யின்ன
தென்றறியவாராத அநிர்வசனமெனின்; அங்ஙன
ங்கூறுதல் மாயாவாதி கூற்றாய் வழுவாமாகலா
னும்; அவையெல்லா மீண்டைக் கேலாமையின்,
வேறுவிடுக்குமா றென்னையெனிற் கூறுதும்; ஒரு
பொருளை அவயவ அவயவிகளாயாதல், குணகுணி
களாயாதல், வேற்றுமைப் பட்டிரண்டாய் நிற்றற்
கேதுவாகிய தாதான்மியமும்; அதுபோல இரு
பொருளே அதுவதுவா யொற்றுமைப்பட்டு ஒன்
றாய் நிற்றற் கேதுவாகிய தாதான்மியமுமெனத்

தாதான்மிய சம்பந்தமிருவகைப்படும்; அவற்றுள் முன்னையது தாதான்மிய மென்றும், பின்னையது அத்துவித மென்றும் வழங்கப்படும்; அத்துவித மென்னுஞ் சொல்லியல்பு மேற் கூறியவாற்றான் வேறுபொருடருமாறின்றி அன்மைப்பொருள் பற்றி இரண்டென வேற்றுமைப்படாமை நிற்றலே யாமென்க.

இதுவே * ஆசிரியர் கருத்தென்பது, "அத்துவித மென்னுஞ் சொல்லே அந்நிய நாத்தியையுணர்த்துமாயிட்டு" என்றதனானும், புடை நூலாசிரியர் "பிரிவரு மத்துவித மாகுஞ் சிறப்பினதாய்" என்றுடம்பொடு புணர்த்தோதியதனானுமறிக.

இவ் வத் துவிதம், அபேத சம்பந்தமாகிய ஐக்கியா ஐக்கியுமன்றி, பேதாபேத சம்பந்தமாகிய தாதான்மியமுமன்றி, பேத சம்பந்தமாகிய சை யோகமுமன்றிக் கலப்பும், உடனாதலும், வேறாகலு மாகிய மூன்றுந் தன்கட்டோன்றி நிற்றல் பற்றி, வம்மூன்றற்கும் பொதுவாகக் கூறப்படுமாகலான்; வவ்வத்துவிதத்திற் கொவ்வோரிடங்களின் அலைகடலிற் சென்றடங்குமாறுபோலெனவும் வான த்தில் வானும் மணத்தின் மணமும் போலெனவும் அபேதவுவமையும்; பண்ணையு மோசையும் போலப் பழமதுவு மெண்ணுஞ் சுவையும் போலெனவும் நீரு மமுதமும்போலாங் காணரு ரருளென

* ஆசிரியரென்றது முதனூலாசிரியராகிய மெய்கண்ட தேவனார்.

வும் பேதாபேத வுவமையும்; இரும்பைக் காந்தம் வலித்தாற்போலிமையக்தெனப் பேதவுவமையுமொரு புடை யொப்புமைபற்றி எடுத்துக்காட்டுப வாகலின், இங்ஙனமூரணுவபோல வேறுவேறு பெயரெடுத்துக்காட்டுதல்பற்றிமலைபற்க.

இம்மூன்றியல்பும் தன்கட்டோன்ற இவற்றிற்கு வேருய் நிற்கும் அத்துவிதத்திற்குச் சிறந்தெடுத்துக்காட்டப்படு முவமையாவது ஆன்ம போத முங் கண்ணொளியுந் தம்முளத்துவிதமாய்நிற்றலாமெனக் * "காணுங் கண்ணுக்குக்காட்டு முளம்போற் காணவுள்ளத்தைக்கண்டு காட்டலின்" எனவும், † "காட்டக்கண்டிடுந் தன்மை யுடைய கண்ணுக்கேயுமுயிர் காட்டிக் கண்டிடுமாபோ லீசனுயிர்க்குக் காட்டிக் கண்டிடுவன்" எனவும், ‡ "அறிவொளிபோற் பிரிவரு மத்துவிதமாகும்" எனவுமூன்று நூலாசிரியருஞ் சித்தாந்தமுடிவுணர்த்தும் வழி இதனையே யெடுத்துக் காட்டியவாறறிக.

இவ்வத்துவித மேனையோர் போலக் கேவலம், விசிட்டம், மறுதலையென்றுதலொன்றுன் விசேடிக்கப்பட்டு நின்று பொருளுணர்த்தாது சுத்தமாய் நின்றே பொருளுணர்த்துதலிற் சுத்தாத்துவிதமென வழங்கப்படும்.

ஈண்டுச் சுத்தமென்றது யாதொன்றானும் விசேடிக்கப் படாது நிற்றலே. அதுவிசேடத்தைச் சுத்த

* சிவஞானபோதம், † சித்தியார். ‡ சிவப்பிரகாசம்.

சத்தை யெனத்தார்க்கிகர் கூறும் வாய்பாட்டானு மறிக.

இங்ஙன மொருபொருளிருதன்மையான வியாபகமும் வியாப்பியமுமாய் வேறுபட்டுநிற்குந் தாதான்மியம்போல, வியாபகமும் வியாப்பியமுமான இருபொருளொரு தன்மையானொற்றுமைப்பட்டு நிற்குந்தாதான்மிய சம்பந்தமொன்றுண்டெனவும், அதுவே அன்மைப்பொருள்பற்றி அத்துவிதமென னுஞ்சொல்லானுணர்த்தப்பட்டதெனவும், அறியப்படாதார் தத்தமக்கு வேண்டியவாறு யிவ்வுண்மையுணராததுமன்றி விஞ்ஞானதீக்கையானுடல் பொருள்களோடொப்பச் சற்குரவன்கையிற்றானஞ்செய் தளித்த பொருளென்றறியு மறிவு சலியாமைப் பொருட்டு நாடோறுஞ்சிவபூசையிற் செபகன்மங்களோடொப்பச் 'சிவோதாதா' வென்னு மந்திரமோதி ஆன்மாவையுஞ் சிவனுடைமையாகப் பூநீரோடு தானஞ்செய்தளித்துந்தான் சுதந்திரனே சிவனுடைமை யல்லனெனப் பிணங்கிப் பரம சற்பாத்திரத்திற்றானஞ்செய்த பொருளை அபகரிக்க நினைக்கு நினைவுடையாரோடுபேசினு முய்தியில்லதோர் கொடிய பாவமென்றொழிக. தன்னைத்தானஞ்செய்தலாவது தான் சிவனுக்குப் பரதந்திரனென்றறிந்து அவனருளல்லா தொன்றையுஞ் செய்யானாகி நிற்றலே யாமென்றுணர்தல்.

அற்றேல், மலவாதனை நீங்குதற்பொருட்டுத் தன்னைத் தானஞ்செய்ததாகப் பாவித்தன்மாத்தி

ரமையாகலின், அதுபற்றி இழுக்கென்னையெனின் அங்ஙனமாக;

அப்பாவனை போலியோ, உண்மைபோவெனக் கடாயினர்க்கு, உண்மை யெனிற்பரதந்திரராதற் கிழுக்கில்லை, போலியெனின் பசித்தவ னுண்டான்போல, எத்துணைப்பாவகஞ் செய்யினும் பசி நீங்குதல் கண்டில மாகலின், அதுபோலப் போலிப்பாவனையான் மலவாதனை நீங்குமாறின்மையின், அது வீண்டொழிலாய் முடியும்; இன்னும் பாவனைபோலியென்பார்க்குப்பாவனை வழியவாச்செய்யு மந்திர கிரியைகளும் போலியாய் முடியும்; முடியவே பாவனை முதன் மூன்றுனும் அவர்செய்யுஞ்சிவதிக்கையும், சிவபூசையுஞ், சிவத்தியானமுமுதலிய வெல்லாவாசாரங்களும் அங்ஙனம் போலியாச்செய்வது தமக்காயினும் பிறர்க்காயினும்பயன்படுமாறின்மையின் மாணுக்களை வஞ்சித்துத் தம்முடம்பை யோம்புதற்பொருட்டுச்செய்யு மாரவாரமாத்திரை போலுமென்றொழிக.

அற்றேல், கருடபாவனைசெய்வோன் கருடனுதல்கண்டிலம்; அப்பாவனையான் விடந்தீர்தல்கண்டனமாகலின்போலிப்பாவனையும் பயன்படுமென்பது பெறப்படுமாலெனின்; அறியாதுகூறினுய்.—மாந்திரிகன் தன்னுடம்பைக் கருடனுகப் பாவிப்பானல்லன்; மற்றென்னையோவெனின் கருடனுக் கதிதெய்வமாக நிற்கு மந்திர மூர்த்தியாகத் தன் னுன்மாவைப் பாவிப்பன்; அங்ஙனம் பாவித்தவ

ழிச்சார்ந்த தன் வண்ணமாய் நிற்கு-மியல்புடைய வான்மா ஆண்டமந்திரரூபியாய் நிற்றற்கிழுக்கின்மையின், அது பற்றி ஆசங்கையின்மை யுணர்க.

இன்னும் பாவனைகளு முபாசனைகளுங் கற்பித்துக்கொண்டு செய்யும் போலியென்றல் மாயாவாதிகூறுங்கூற்றாகலின், அது சைவசித்தாந்தத்திற் கேலாமையறிக.

அற்றேல், ஆன்மாசார்ந்த தன்வண்ணமாய் நிற்குமியல்புடையனென்றற்கும், அதனானே தன்னாற் கணிக்கப்படு மந்திரரூபியாய் நிற்பனென்றற்கும் விலங்கு புள்ளுக்கு மதிதெய்வமாய் நின்ற திட்டிக்கு மந்திர முண்டென்றற்கும் பிரமாண முண்டாயினன்றே, அதுபற்றிக் கருடபாவனை முதலாயின உண்மைப் பாவனை யென்று கொள்ளப்படும்; ஆகலினவற்றிற்குப்பிரமாணமென்னையெனின், சர்வஞானோத்தரமுதலியஆகமங்களே பிரமாணமெனவறிக.

அஃதெங்ஙனமெனிற் காட்டுதும்; சர்வஞானோத்தரத்திற் பசுவும், பாசமும், அதிகாரஞ்செய்திருப்பதாகிய பதியும், அதிகாரத்தி னொழிந்து தன்னியல்பினிற்பதாகிய சிவமுமெனப் பதார்த்த நான்கென் றெடுத்துக்கொண்டு, அவற்றிற்குத் தனித்தனி இலக்கணமுமுணர்த்திப் பின்னதுகேட்ட ஆறுமுகக்கடவுளுக்கு, அங்ஙனமப்பிரமேயமாயொன்றுவமிக்கப்படாததாய், அதி சூக்குமமாய், வியாபகமாய்த் தன்னியல்பினிற்குஞ் சிவ

த்தையறியுமாறெங்ஙனமென்னும் ஆசங்கைநீகழா மைப் பொருட்டு, சிவப்பொரு ளத்தன்மைத்தா யினும் அதனை யறிதற் குபாயங் கூறுகின்றாம். அவ்வுபாயம் வாதிகளெவரானு மறியப்பட்ட தன் றாய்க் குருபரம்பரையினறியப்படுவது, ஒருவருக் கும் யாங்கூறினேமல்லேம், அதனை நீகேட்பாயா கவென்றதன் பெருமையை யெடுத்துக்காட்டி, அ நாதிமுத்தனாய் நின்ற சிவனுக்குரிய தன்மைகளும், அத்தன்மையனாகிய சிவனே நானெனச் சிவோகம் பாவனைசெய்யுமாறும், அவ்வாறன்றித் துவிதபா வனைசெய்தாற் படுமிழுக்கும் விளங்க விரித்துணர் த்தித் துவிதபாவனையைக் கைவிட்டுச் சிவோக மென அத்துவித பாவனைசெய்வோன், ஏகதேச மாய் நின்றறிவதாகிய சிற்றறிவினீங்கி, முழுதும் வியாபகமாய் நின்றறிவதாகிய முற்றுணர்வு விளங் கிச் சிவனைபறிந்து தான் சிவனேயாவனெனச் சி வனை யறிதற்குபாயங்கூறி, பின்னதுகேட்ட ஆறுமுகக்கடவுளுக்கு, மேலுந் தேசங்கூறும் வழியும் இலக்கணங்கூறும்வழியுஞ் சிவனுமான் மாவுமிருபொருளெனவைத்தோதுதலின், சிவனின் வேறாகிய ஆன்மா சிவோகமெனப் பாவிக்கும் அ த்துவிதபாவனையாற் சிவனே தானாக ஐக்கியமாமா றெங்ஙனமென்றுஆசங்கைநீகழாமைப்பொருட்டு, ஆன்மா தன்னியல்பே யறியாது பசுத்துவத்தோடு கூடியவழிப்பசுவாய்நின்றான், அதுபோலத்தன்னை யறிந்து சிவத்துவத்தோடு கூடிய வழிச்சிவமாய் நிற்பதற் கையமில்லை, ஆதலாற் றன்னையுந் தலைவ

னையும் அபரபரபேதத்தானும், தூல சூக்குமபேத
த்தானு மெப்பொழுதும் பயின்றறிதல் வேண்டு
மென்றோதினீர்; அற்றேல், ஆன்மாவினியல்புதனி
த்து நில்லாது பசுத்துவத்தோடுகூடிப் பசுவென
வும், சிவத்துவத்தோடுகூடிச் சிவமெனவும் பலத
ன்மைப்பட்டுநிற்குமாறென்னையென்றுமீளவுமையு
றுமைப்பொருட்டு, அதவாவொன்றெடுத்துக்கொ
ண்டு, தெளிவுபிறவாது மீளமீள மயங்குதற்கேது
வாகிய வார்த்தைகளை விகற்பித்திங்ஙனம் பலவா
கச் சொல்வதென்னையெனக்கூறி யொழித்தெல்
லாச் சங்கைகளு நீக்கித் தெளிவுபெறுதற்கேதுவுந்
தொகுத்தொருவார்த்தையி னுணர்த்துவான்புகு
ந்து, 'சர்வோதரும' மென்றருளிச்செய்தார்.

இதன்பொருள், ஆன்மா அங்ஙனமிருதன்மைப்
படுமாறென்னை யென்றையுறுது எல்லாப்பொருளி
ன்றன்மைகளுமான்மாவுக்குளவாம், அஃதெங்ஙன
மெனின், ஆன்மா எதனை யாமெனப்பற்றினன்
அதனதன் சுயாவமே தன்சுபாவமாந்தன்மை
யுடையையான், அதுவதுவாயே நிற்பனென்றிங்
ஙன மான்மாவை யறியுமாறு தொகுத்துக்கூறி
னுங்கண்டு கொள்க வென்பதாம்.

இங்ஙனந்தொகுத்துணர்த்தி இன்னுமிவ்வாற
றியு மான்மஞானத்தின் பெருமையும், அதனாற்
பெறும்பேறும், அதனையறிதற்குபாயமும், அறி
ந்தானது பெருமையும் விரித்துக்கூறி, இதற்கு
மேற்சொல்லற்பாலது சிறிதுமில்லை; ஆகலான் ம

ளைவிகற்பங்களை யொழித்திங்ஙனமத னுண்மைய றிந் துபாயங்களைச்செய்வோன், இங்கே சீவன் முக்தனும் அகம்புற மெங்கும் வியாபித்து, தத்தருமதரூபியாய்த் தத்தருமனெனப்பட்ட வென்பதற்குச் சிவதருமதருமியாய்ச்சிவ தருமமெனப்பட்ட வெனப் பொருள்கொள்க. தத்தருமியாய்த் தத்தருமமெனப்பட்ட முற்றுணர்தன் முதலியவெண் குணங்களையுடையவனும், இங்ஙனஞ் சிவதத்துவத்தைப் பெற்றுச் சிருட்டிப்படுந்தன்மை முதலிய வின்றிச் சிவ சமமாவன்.

இத்தன்மை யுடையவனுக்குத் தவம், செபம், தியானம், பூசை முதலியனவொன்றும்வேண்டா, சத்தியஞ் சத்திய முக்காலுஞ் சத்தியம்; இதற்குமே லறிதற்பாலன ஒருநூலினு மில்லையென வலியுறுத்திப், பின்னு மான்மா வெல்லாவற்றினும் அதுவதுவாய் நிற்குமாற்றைப்பூதான்மா முதலறுவகைப்படுத்தி விரித்து நின்றது கூறுதுங்கேட்பாயாக வென்றெடுத்துக்கொண்டு, பூதபரிணாமமாகிய வுடம்பினியல்புகளும், ஆன்மா அவ்வுடம்பைப்பற்றியவழிப் பூதான்மாவென நிற்குமாறும், அகத்தின் கண்ணவாகிய வாக்குகளி னியல்பும், ஆன்மா அவற்றைப்பற்றி அந்தராமன்மா வென நிற்குமாறும், சூக்குமபூத முதலிய தத்துவங்களி னியல்பும், ஆன்மா சுத்த தத்துவங்களைப்பற்றிய வழித்தத்து வான்மாவென நிற்குமாறும், தத்துவங்களுள்ளும் ஆன்மா வெவ்வேறு தத்துவங்களைப்பற்

றிய வழி அவ்வாத்தத்துவ மயமாய் நிற்ப னென்பதும், ஆன்மாப்போக்கிருத்துவ மெய்திப் புருடதத்துவனென நிற்கு மியல்பும், அங்ஙனம் புருடதத்துவ மயமாய் நின்று பிரகிருதி குணங்களைப் பற்றி இன்பத்துன்பங்களை நுகரும் வழிச்சீவனென நிற்கு மென்பதும், சுரர், நரர், விலங்கு, புள், தாவர மெல்லாவற்றிற்கு மதிதெய்வங்களுள வெனவும், தாவர சங்கமங்களுண் மந்திரங்களான் அதிட்டிக்கப்படாத உயிர்க ளில்லையெனவும், மந்திரங்களை யுச்சரிக்கு முறைமை யிவ்வாறெனவும், இவ்வாறு மந்திரங்களி னியல்பும், அவ்வம்மந்திரங்களைக்கணிப்புழி ஆன்மாப் படிகம்போல அவ்வம்மந்திர மயமேயாகி மந்திரான்மாவென நிற்குமாறும், அதனின் வேறாகிய இவ்வைவகைப்பெயரு நீங்கிய வழி மேற்கூறிய அத்துவித பாவனையாற் பரமான்மாவென நிற்றல் சித்தென்று சாதிப்பொதுமைபற்றி இயற்கையாதலுந் தெரித்துணர்த்தி, இங்ஙனமாகலான், அத்துவித பாவனை யுடையோன் ஞானக்கண்ணினாற் சிவனை ஆன்மாவிற்கண்டு முழுதும் வியாபகமாய் நின்றறிவதாகிய முற்றுணர்வுடையனாய், அவ்வப்பொருளியல்பெல்லாமறிந்து, மலவாதனை நீங்கிக் கேவலமாய் நின்று முடிவு காண்கிலாப் பேரின்பத்தைப் பெறுவானென முடிந்தது முடித்துக்காட்டி, இங்ஙனம் சீகண்ட ருத்திரக் கடவுள் ஆறுமுகக்கடவுளுக்கு ஞானபாகஞ் செவியறிவுறுத்தருளினார்; இன்னும் இதனை இங்குரைத்தவாறு பற்றி விரித்துரைத்துக்கொள்க.

இவ்வாகமத்து இத்கனை வலியுறுத்தி, சிவனோ டொற்றுமைப்பட நின்று தன்னைப்பாவிப்பதாகிய ஆன்மஞான மோனமொன்றே அப்பிரமேயமா யொன்றோடு வமிக்கப்படாது நின்ற அச்சிவனையறி தற் குபாயமென்றும்; அங்ஙனம்பாவிக்கவே, அச் சிவனோடொற்றுமைப்பட்டுப் பேரின்பத்தைப் பெ றுவானென்பதும், அசுத்தப்பொருளோ டொற் றுமைப்பட்டு நின்ற ஆன்மா சுத்தப்பொருளோ டொற்றுமைப்பட்டு நிற்குமா றெங்ஙனமென்னு மைய நீக்குதற்குத் தொகுத்தொருவார்த்தையாற் கூறுதுமென் றெடுத்துக்கொண்டு, ஆன்மாவானது யாதனையாதனையானென்னச் சார்ந்தான் அதனதன் சுபாவ மே தன் சுபாவமாய் அதுவதுவாய் நிற்பனென்று கூறி, இங்ஙனமேவலாற் சிவனோ டொற்றுமைப் பட்டு நிற்புழிச் சிவன் குணங்களாகிய வெண்குண ங்களும் தன்றன்மையாகக்கொண்டு சிவனேயாய் நிற்பன்; இதுவே சிவத்தைப் பெறுதலென்றும், இதற்கு மேலாய பலனொருநூலானுமில்லை, முக்கா லுஞ் சத்தியமெனை வலியுறுத்தியும்; ஆன்மா எல் லாவற்றினு மதுவதுவாய் நிற்கு மாற்றைஇன்னும் விளங்கக்கூறுது மென்றெடுத்துக்கொண்டு, பூதா ன்மா, தத்துவான்மா, மந்திரான்மா, அந்தரான் மா, சீவான்மா, பரமான்மாவென்றறுவகைப்படுத் து, அவ்வவற்றிற்கூடியவழி அவ்வப்பெயர்பெற்று அதுவதுவாய்நிற்பனென ஆண்டு நிற்குமாறுவிரித் துணர்த்தியும், படிகத்தை யுவமைகூறியும், இங்ங னமேனையாகமங்கள்போலப் பொருள் கவர்ச்சிப்

படுதற் கிடங்கொடாத வண்ணம் ஆறுமுகக்கட வுண் மாட்டுவைத்த கருணைமிகுதியான், அங்கை நெல்லிக்கனிபோல, ஆன்மாவினியல்புவிளங்க வுணர்த்திப் பலகாலும் வலியுறுத்தி, எல்லா வாகமங்களினுஞ் சிறந்ததென்பதுதோன்றச் சர்வ ஞானோத்தரமெனப் பெயருமிட்டருளிச்செய்த சீகண்டருத்திரக்கடவுள் திருவுளக்குறிப்பிங்ஙனமென்க.

இனிஉடல் பொருளாவி மூன்றும் ஞானதீக்கையின் முதல்வனுக்கெனத் தானஞ்செய் தளித்தலான் முன் செயற்கையாற் றன்னுடைமையாய் நின்ற மூன்றுந் தானஞ்செய்த பின்னர்த் தனக்கின்றிச் சிவனுக்குடைமை யாயவாறு பெற்றும்; பெறவே, ஆண்டுப் பொருளென்றதுடம்புபோல வொற்றுமை யுடைத்தாய்த் தன்னனுகரக்கிடந்த உடல்வினையேயன்றி முன்பே தன்னாற் றுறக்கப் பட்டிழிந்த தரப்பொருளன்றென்பது ஈமேபோதருதலானும், அவ்வாறின்றி ஆண்டுப்பொருளென்ற செல்லாவற்றிற்கும் பொதுவெனக் கொள்ளினும் உடல்வினையு மவற்றுளடங்குதலானும், அங்ஙன முதல்வனுக்கென்றீந்த வுடல்வினையை மீளவுந்தா னுகரக்கருதுவோன் அவ்வாறு தானஞ்செய்தளித்த ஆன்மாவை மீளவுஞ் சுதந்திரனாகக் கருதுவோன் சிவசமவாதியோடொப்பவனா மாகலின் முதல்வனுக்கென்றளித்த பொருளைத் தானுகரக் கருதுதல் பெரியதோர்ிழுக்காத லறிக.

இன்னுந் தன்னுடம்பே தனக்கின்றி முதல்வ னுக் குடைமையாக ஈந்தவழி, அவ்வுடம்பிடமாக வரும் வினைப்பயனைத் தானுகருகற் கோரியல்பின் மையு மறிக. இன்னுந் தனக்குத்தானே சுதந்திரமின்றிச் சிவனுக்குடைமையாய வழி தான் மற்றொன் றுடனுக்கு மாறுயாண்டையதென்க.

கன்னு லளிக்கப்பட்ட பொருண் மூன்று முதல்வனேன்று கொண்டானென்ப தன்றோ? "என்றனவியு முடலு முடைமையெல்லாமுங் குன்றேயனையாயென்னை யாட்கொண்டபோதே கொண்டிலையோ" எனவும், "உடலிடங் கொண்டா யினியுன்னை" எனவும், "என்ற வுடற்கனய்" எனவும், "என்ற வுடற்பழவினைகள்" எனவும், "என்ற வவனை" எனவும், "என்று கொண்டாயென்னை" எனவும், "நா மொழிந்து சிவமாவ"தெனவு மோதியவாறென்றறிக.

திருச்சிற்றம்பலம்.

அத்துவிதவாக்கியத்தேளிவுரை

முற்றிற்று.

இது சிவஞான பாடியத்திற்கண்டது.

---

ஸ்ரீமெய்கண்ட தேசிகன் றிருவடி வாழ்க.

ஸ்ரீசிவஞான யோகிகள் சேவடி வாழ்க.